7th September 1960]

THE HON. SRI C. SUBRAMANIAM : I do not have any opinion about the low percentage of passes and what the reasons are for that.

*Adulteration (foodstuffs)*

* 506 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—

(அ) உணவு பொருள்களிலே கலப்படம் செய்து விற்பனை செய்ததற்காக 1960-ம் வருடத்திலே எத்தனை பேர்கள் தண்டிக்கப் பட்டார்கள் ?

(ஆ) உணவுப் பொருள்களிலே கலப்படம் செய்து விற்பனை செய்வதைத் தடுக்க அரசாங்கம் என்ன விசேஷ நடவடிக்கைகள் எடுத்துள்ளது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) During the period from 1st January to 31st May 1960, 728 persons were convicted.

(ஆ) Under the provisions of the Prevention of Food Adulteration Act necessary action is taken to prevent the manufacture and sale of any adulterated foodstuffs. This Act provides for severe and deterrent punishments including imprisonment of offenders. Deterrent penalties like imprisonment and heavy fines are producing desired results. Food Inspectors have been appointed in 157 local bodies in the State for enforcing the provisions of the Act.

SRI P. G. MANICKAM : ஸார், நகரங்களிலே, குறிப்பாக கிராமங்களிலேகூட, கலப்படம் இல்லாத உணவுப் பொருள்களைப் பார்க்கிறதே அரிதாக இருக்கிறது. சர்க்காரால் எடுக்கப்பட்டு வரும் நடவடிக்கைகள் போதுமானதாக இல்லை. பொது ஜனங்கள் அவதிப்படுகிறார்கள். ஆதலால், அது சம்பந்தமாக சர்க்கார் கவனம் செலுத்துமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்போது இருக்கிற சட்ட பிரகாரமே தண்டனைகள் ரொம்பப் பிரமாதமாக இருக்கிறது. முதல் தடவை குற்றத்திற்கு, ஒரு வருஷ சிறைத் தணடனை, ரூ. 2,000 'ஃபைன்'; இரண்டாவது தடவை குற்றமானால், இரண்டு வருஷத் தண்டனையும், ஃபைனும்; மூன்றாவது குற்றத்திற்கு, நாலு வருஷ சிறை, ஃபைன் என்றெல்லாம் இருக்கிறது. இப்போது, நிறைய இன்ஸ்பெக்டர்களெல்லாம் வைத்து தடைகள் பண்ணுவதால், கலப்படம் செய்வது குறைந்து கொண்டே வரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

*Fire accident (Mental Hospital)*

* 507 *Q.*—SRI A. A. RASHEED : SRI A. VEDARATHNAM : } Will the Hon. the Minister for Revenue be pleased to state the extent of damage caused to Mental Hospital due to a fire on 26th June 1960?

THE HON. SRI M. A. MANICKAVELU : Rs. 25,000.

SRI A. A. RASHEED : Sir, May I know the cause of action and is it a fact that the condition of the Mental Hospital patients worsened after the fire accident?

THE HON. SRI M. A. MANICKAVELU : This has nothing to do with the condition of the patients of the Mental Hospital. This fire is reported to have taken place on account of short circuit in electrical wiring.

**SRI A. VEDARATHNAM :** இந்த விபத்தினால், உயிர் சேதமோ, வேறு அபாயமோ ஏற்பட்டதுண்டா ?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** நல்ல வேளையாக அப்படி ஒன்றும் ஏற்படவில்லை.

*Primary Health centres*

*** 508 Q.—SRI N. R. THIAGARAJAN :** கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மதுரை ஜில்லாவில் எத்தனை பிரைமரி ஹெல்த் சென்டர்கள் திறக்க திட்டமிடப்பட்டது ?

(ஆ) அவைகளில் எத்தனை எங்கெங்கு திறக்கப்பட்டது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Eight, Sir.

(*b*) Six centres have so far been opened at the following places :—

1. Dhadicombu.
2. Natham.
3. Thirupparankundram.
4. Dombacheri.
5. Alanganallur.
6. Athoor.

**SRI N. R. THIAGARAJAN :** ஆறு செண்டர்கள் என்றால், பாக்கியெல்லாம் எப்பொழுது திறக்கப்படும் ? 503-வது கேள்விக்கு பதிலளிக்கையில், மேசையில் வைக்கப்பட்டிருக்கிறது என்றார்கள். இந்த வரிசையில் ஒன்றும் இல்லை . . .

**MR. SPEAKER :** கனம் அங்கத்தினர் அவர்கள் அப்பொழுதே அதைச் சொல்லியிருக்கவேண்டும்.

**THE HON. SRI M. A. MANICKAVELU :** இந்த நிலையங்களை யெல்லாம், அவ்வப்பொழுது ஏற்படுத்தி வருகிறோம். கொஞ்சம் தாமதம் என்றால், அதற்குக் காரணம் போதுமான டாக்டர்கள் கிடைக்கவில்லை. இப்பொழுது முன் வருகிறார்கள்; இனி துரித மாகத் திறக்கப்படும்.